ஸ்ரீ

ஸுப்பிரமண்யஸ்வாமி ஸஹாயம்.

---

திருக்குற்றாலம்

# தெண்டாயுதபாணி

## கீர்த்தனைகளும்,

திருச்செந்தூர்

# ஸுப்பிரமண்யஸ்வாமி

## கீர்த்தனைகளும்

இஃது

திருநெல்வேலியைச்சேர்ந்த

வண்ணார்பேட்டையிலிருக்கும்.

பிரஹதாம்பாளம்மாள் அவர்களால்,

இயற்றி

திருநெல்வேலி

நூருல் இஸ்லாம் பிரஸில் பதிப்பிக்கபட்டது.

முதல் பதிப்பு காப்பி 125.



1916.

ஸ்ரீ

சிவமயம்

கடவுள் துணை

# திருக்குற்ருலம் மௌனசுவாமிகள்,

# தெண்டாயுத பாணியை,

# பிரதிஷ்டைசெய்த பாடல்கள்.

கணபதிஸ்துதி

விருத்தம்.

தொந்திவயிற்ரோனே துலங்கும்ஒருகொம்போனே
தந்திமுகத்தோனே தாள்சடையான்புத்திரனே
செந்திப்பதிவாழும் கந்தனது சோதரனே
சந்ததமும் என்கவியை தான்வந்துகாத்திடுவாய்.

சுப்பிரமணியர்ஸ்துதி.

தாயும்தகப்பனும் சொன்ன சொற்களை
தன் சிரமேல்கொண்டு
அரைநிமிஷமண்டலமெல்லாம் அளந்து
வந்த மணியே
நவமணியே எந்தனதுகுலம் தழைக்கவைத்த
சுப்பிரமணியே சரணம் சரணம்

குரு வணக்கம்.

மண்டலமெங்கும் புகழ்பெற்ற மௌனகுரு
குற்ருலமடமதில் தெண்டாயுதபாணியை
பிரதிஷ்டைசெய்த பாடல்களை தெரிந்தமட்டும்
பாடுதற்கு குருவை நான் வணங்கினேனே.

விருத்தம்

பச்சைக்குழந்தைகளும் பாடிப்பணிந்தொழுக
கொச்சைத்தமிழ்மொழியை கூச்சமன்றி கூறிடுவேன்
இச்சையுடனேசெப்பும் இத்தெண்டபாணி பாடல்களை
பக்ஷமுடன் பாடிடுவீர்ந்த பரம்பொருளை நாடுவீரே.

ராகம் காம்போதி தாளம் ஆதி.

பல்லவி.

கணநாதா சரணம் காமிதஹரணம்

அனு பல்லவி.

ஜெகமுகவதன கிருபாகரா
மோதகப்பிரியா மூஷிகவாஹனு (க)

சரணம்.

ஏகதந்தரூபா பார்வதிபாலா
பரமகல்யாண குணநாதா (க

பல்லவி.

செந்தில்வாழும் கந்தனே செந்தூரில்வாழும் குகனே
செந்தூரில்வாழும்குகனே செந்தூரில்வாழும்குகனே (செ)

அனுபல்லவி.

பார்வதிபாலனே பரமதயாளனே
பக்தர்க்கனுகூலனே நித்தியபரிபூரண
வேலாயுதா ஓடிவா வேலாயுதா ஓடிவா
வடிவேலாயுதா ஓடிவா (செ)

சரணம்,

வள்ளிதெய்வானை மகிழும்மணவாளனே
மாசற்ற ரூபப்பிரகாசமுள்ளவனே
வாவென்றுனையழைத்தேன் வாவென்றுனையழைத்தேன்
வந்துவரம்தந்திட வேண்டுமிப்போ [செ]

ராகம் நாட்டை தாளம் ஆதி.

பல்லவி.

வாணி புஸ்தகபாணி வாணி மதுகரவேணி [வாணி]

அனு பல்லவி.

வாணீயென்னுவினில் வரவேணும்
அனுக்கிரகம்பெறவேணும் அம்பா [வாணி]

சரணம்.

வீணுபுஸ்தகபாணீ கையினில் ஜெபமணிதாரி [வா]
அம்பாள்மீதில் அனுக்கிரகம்வைத்து
இக்கவிகள்பாட உதவிசெய் [வாணி]

சூராணிகை—ஆரபி

வர லெக்ஷ்மி.

[1] ஸுத்த ஸுரூபிணி மெத்தவைய்யாசனி
மோக்ஷமீயும் லெக்ஷ்மிநீயே

[2] மோகமென்னும் காடுகளை வெட்டித்தவிர்த்துமே
முக்திதரும் லெக்ஷ்மிநீயும்

[3] அஷ்டாங்கயோகத்தை ஸித்திசெய்துதரும்
ஓமஹாலெக்ஷ்மிநீயே

[4] ஓங்காரகாரியே ஓமந்தஹாஸியே
ரீம்காரகாரிநீயே

[5] பக்தஉல்லாஸியே பஞ்சாக்ஷர ரூபியே
பக்தர் கனுகூலிநீயே

[6] எங்கும்பரிபூரணி ஏகாந்தகாரணி
ஏமஹாலெக்ஷ்மிநீயே

[7] எந்தனது ஹிருதயத்தில் எப்பொழுதும்
குடிகொண்ட ஓமஹாலெக்ஷ்மிநீயே

[8] ஸந்தானஸப்பத்து பாக்கியங்களைத்தரும்
பாக்கியவர லெக்ஷ்மி நீயே

ஆரபி சூரணிகை.

1. இந்தப்பெண்வீதினில் உனக்கித்தனைவாதேனோ
நான்சற்றும் அறிகிலேனே
ஏழைஎன்றெண்ணியே முற்றும்மனமிரங்காமல்
இருப்பதுனக்கழகாகுமோ
முற்றும் மவ்னப்சாதிப்பது உந்தனுக்கழகல்லவே
எந்தனதுகுறைகளை உந்தனிடஞ்சொல்லியே
ஆற்றுவோம் என்றிங்குவந்தேன்
இப்படிக்கபடமாய் இருப்பது·உந்தனுக்கழகாகுமோ
ஈசனே தண்டபாணி வாஸனே
என்னை உன் அடைக்கலம்கொள்வாய்ஸ்ரீமௌனகுருவே

2. உற்றார் உறவினர் முற்றும்பொய்யென்றுமே
உன்னையேநம்பினேனே
நீஒன்றுமறியாதுபோலேயிருப்பது தர்மந்தானோ
ஊரினில்பேசுகிறகேள்விகள் பேச்செல்லாம்
உன்செவிதனில் கேட்கவில்லையோ
ஊமையோ செவிடுதானோ
இதின் உண்மைஅறிந்துநீ உரைக்காவிட்டால்
இனி உன்னைநான் விடுவதில்லை

உன்பாதமே கெதியென்று நம்பி வந்தேனிதோ
தென்டன்மேல் ஸாக்ஷியாக
ஈசனே தண்டபாணிவாசனே
என்னை உன் அடைக்கலம்கொள்வாய் ஸ்ரீ மௌனகுருவே

3. எந்தன துமீதினில் குற்றம் இருந்தாலும் நீ அதை
கேட்பதற்கு அடுமை அல்லவோ
உன்னையே தெய்வமென்றெண்ணியே கைதொழு
உறுதியாய் நம்பினேனே
சற்றுகிலும்என்னை ஸிவத்துத்தான் ரக்ஷிக்க
ஸாதகமுனக்கில்லையோ
மதிகற்றகுருவே மங்களமூர்த்தியே மாக்ஷிமை
பொருந்திய பரனே
திக்கற்ற ஒருபெண் தவிப்பதை அறிந்து நீ
ஊமைபோலிருந்திடாமல் கண் திறந்துபார்த்து
உன்சன்னதி அழைத்துக்கொள்வாய்
ஈசனே தண்டபாணி வாசனே என்னை உன்
அடைக்கலம்கொள்வாய் ஸ்ரீ மௌனகுருவே.

இராகம், தன்னியாசி, தாளம், ஆதி.

பல்லவி.

கண்டேன் கண்டேன் கண்டேன் கண்குளிர்ந்தேன்
என்னுவினில்வா சரஸ்வதியே.

அனுபல்லவி.

உண்டதுபோல்பசி தீர்ந்தேன் நான், உந்தனை
கண்டுமகிழ்ந்தேன், அங்கத்தில் ஆனந்தம்கொண்டேன்
அதிசந்தோஷமடைந்தேன். [கண்டேன்

சரணம்.

அண்டினபேர்களுக்கு அனுக்கிரகம் தந்தருள் தாயே
செல்வேலிஊரினில் வந்து அப்பாளுக்
கனுக்கிரகம்தந்து ஆதரிப்பாய் என்தாயே [கண்

இராகம், கல்யாணி, தாளம், ஆதி

பல்லவி.

இந்தமட சிங்காரம் என்னசொல்லுவேநான்

### அனுபல்லவி.

செந்தாமரை முகத்தோடு. தெரிசனந்தான் கொடுக்கும்
சிங்காரம் இந்த

### சரணம்.

[1] குற்றாலம்ஊர் தனிலே முக்திபெறவே நல்ல
மௌனஸ்வாமிமடமும் இருக்குது என்னசொல்வேன்
சிங்காரம் இந்த

[2] தேசதேசங்கள்தோறும், சுற்றிவந்துபார்த்தாலும்
இந்தமகிமையைப்போல் எங்கும் நான்கண்டதில்லை
சிங்காரம் இந்த

[3] அந்தமடவாசலில், சங்கராசாரியாரை பிரதிஷ்டை
செய்திருக்கிறது இன்னும் அதிசியங்கேள்
சிங்காரம் இந்த

[4] தினந்தினந்தோறுமங்கே, வேதகோஷமுளங்க
நல்லவிப்ரர்கள் கூடியிருக்கின்ற அழகும்
சிங்காரம் இந்த

[5] நிர்கெதி அம்பாளும், சொன்னசொற்களில்
முற்றுந்தப்பிதமிருந்தாலும் பொறுத்தருள்செய்வீரே
சிங்காரம் இந்த

### குரவஞ்சி.

#### கண்ணி

[1] வாசலிது வாசலிது, முக்திதரும் வாசலிது
முனிவர்களும் தேவர்களும் புகழ்ந்துவரும் வாசலிது

[2] அஷ்டலெக்ஷ்மிவாசஞ்செய்யும் அழகானவாசலிது
வேதகோஷமுளங்கிவரும் வித்வான்வரும் வாசலிது

[3] தேசதேசங்கள்தோறும் திருப்பணிகள் வந்திறங்கும்
அந்தமௌனஸ்வாமி யிருக்குமிடம்
சித்தர்களும் வீற்றிருப்பார் [வாச

[4] எந்ததெந்தவிதத்திலும், எடுத்துரைக்கலாகுமோதான்
அந்தமடத்திலெல்லாம் அமைத்திருக்கும் வாசலிது

[5] தேவர்களும் முனிவர்களும் தேடியங்கேவீற்றிருப்பார்
காணவந்தபேர்களுக்கு நல்லகாக்ஷிதனைத் தந்திடுவார் [வா]

[6] அந்தமடத்திலுள்ளே, தெண்டாயுதபாணிதன்னை
லோகஉபகாரமாக பிரதிஷ்டைசெய்தவாசலிது

[7] பேதையம்பாள்சொன்னகவி பிழைகளிருந்தாலுமே
அதைபொறுத்து எல்லோர்களும் ஞானவாசல்
சேர்த்திடுவீர். [வாச]

பலமகஜலோடி என்றவர்ணமெட்டு

பல்லவி.

[1] தண்டாயுதபாணியை, கண்டுதெரிசிப்போம்
வாருங்கள்

அனுபல்லவி.

தேவாலைக்கண்டு தெண்டசமர்ப்பித்து
தெரிசனம்செய்திடுவோம் ஆ ஆ தெரிசனம்செய்திடுவோம்
கர்மபந்தங்கள் கஷ்டங்கள்போக்கி முக்திதரும் க்ஷேத்திரமாம்
ஆ ஆ முக்திதரும்க்ஷேத்திரமாம்வாருங்கள், இதைவந்துபாருங்கள்

சரணம்.

அந்தமடத்திலிருக்கின்ற அதிசயம் யார்தானறிவார்கள் ஆ ஆ
யார்தான் அறிவார்கள் சிவ்கேரிஸ்வாமிகள் ப்ரதிஷ்டை
செய்திருக்கும் அந்தஆனந்தங்கேளீர் ஆ ஆ அந்தஆனந்தங்கேளீர்
வந்தபேர்களுக்குபக்திகொடுக்கும்மௌனஸ்வாமிகள்மடமும் தண்

பக்தியுடன்பணிந்தால்முக்திபெறலாம் தெண்டாயுதபாணியை ஆ ஆ
தண்டாயுதபாணியைகண்டு தெரிசித்து ஆனந்தங்கொள்வோம்
அனைவரும்வாருங்கள் ஆ ஆ அனைவரும் வாருங்கள்
வாருங்கள் அம்பாளைபபோல் அனுக்கிரகம் கேளுங்கள் த

இராகம், பரசு. ஆதிதாளம்.

பல்லவி.

கண்டேனேநான்உன்னைகண்டேனேஉண்டதுபோல்பசி
தீர்ந்தேனே கண்

அனுபல்லவி.

கண்டேனேநான்உன்னை என்கலிகளைவிண்டேனே
தேகஅபிமானம்விட்டு ஆனந்தங்கொண்டேனே க

சரணம்.

[1] எத்தனைநாளாகச்செய்த தவபலமோ நான்
இந்ததெரிசனங்கண்டு மகிழ்ந்திட க
(2) வாவென்றென்னையழைத்துமனஸ்தாபந்தீர்த்துவைத்து
அபயம்என்றுசொல்லி அனுக்கிரகிப்பாயோ நீயும் [க]
(3) பேதையென்றம்பாளை பார்த்திடலாகாதோ
ஞானவைராக்யபக்தி அறிவிக்கலாகாதோ [க]

11 இராகம், பரசு, தாளம், ஆதி

பல்லவி,

வந்ததெல்லாம்வரட்டும்என்நெஞ்சமே வடிவேலனிருக்கையில்
வருந்தம் உனக்கிப்போ தண்டாயுதபாணிகிருபையிருக்க வ

அனுபல்லவி,

அவர் துணையல்லால் யார்துணைசொல்லையா
உந்தனைக்காக்கும்பாரம் அவனுங்குஎன்னேரமும் வ

சரணம்,

(1) போதுபோதாய்மனமேதே சஞ்சலப்படுகிறாய்
குறைகளைவிட்டுநீ கூசாமலிருசும்மா வ
(2) பேதையெனும் அம்பாள் சிறுகவிபாடிட பெரியோர்கள்
கேட்டிதை பிழைபொருத்தருள்வீர் வ

பணசுகரு என்ற மெட்டு

12 இராகம், ஹம்ஸதுவனி, தாளம் சாப்பு,

பல்லவி,

மனமேஉனக்கோர்வார்த்தை சொல்லுகிறேன்
இங்கிதமாய்க்கேள் நீயும் [ம]

அனுபல்லவி,

போதுபோதாய் உண்பதுவும் உறங்குவதன்றி
ஒன்றுங்காணேன் [ம]

சரணம்,

[1] எந்தவிதத்திலும் பிரமத்தை வ வ
ஒருமனதாய் இருந்துகொண்டு
அறிந்தாலதில் தெளியும்சொன்னேன் [ம]

[2] ஸ்தூலசூக்ஷ்மசுஷுப்தி ஜாக்ர அவஸ்தை
களிலகப்படாமல் இருந்துகொண்டு
பிரம்த்தையே காணவென்று [ம]

[3] பேதையம்பாள்சொன்னகவியில் பிழைகள்
யிருந்தாலும் பெரியோர்களேகேட்டுமதை
பிழைபொருத்து அனுக்கிரகிப்பீர் [ம]

13 பல்லவி,

எப்போகாண்பேனோ தண்டாயுதபாணியை
என்னுவிதவிக்குதே என்மனம்கசிந்து உருகுதே

அனுபல்லவி,

நித்திரையிலும் கனவிலும்வந்து
உன்நினைவன்றி வேறுநினைவில்லை [எ]

சரணம்,

[1] இறக்கமற்ற நெஞ்சமுள்ளம்தா உன்நெஞ்சம்
எத்தனைநான் கூவியபோதும் [எ]

[2] பேதைஎன்றம்பாள் பிதற்றிட்டபோதும்
வாவென்றுஎனக்கு மதிகள்சொல்லாயோ [எ]

14 இராகம், தோடி, தாளம், சாப்பு,

பல்லவி,

தண்டாயுதபாணியே நான்உன்னைக்கண்டு
மகிழ்வதெப்போ [த]

அனு 'ல்லவி,

[1] எத்தனைஜென்மம் யெடுத்தாலும்மென்ன உன்
தெரிசனம்பாவிக்கு கிட்டுமோ எந்தவிதத்திலும்
உந்தன்தெரிசனங் காட்டியே யென்னை
கூட்டுவாய் [த]

சரணம்,

[2] இந்தஜென்மத்தை கடைத்தேறஓர்வழி எவ்விதத்திலும் நீ
காட்டுவாய் கபடமாகயிருந்திடாமல்
கரையேறும்வழிகாட்டுவாய் தண்டாயுதபாணியே

15 இராகம், மோகனம், தாளம், ஆதி,

பல்லவி,

தண்டாயுதபாணியே வந்தனஞ்செய்தேன் நானுனை [த]

அனுபல்லவி,

காலயெமபடாக்கள் கட்டியிழுக்கும்
முன்னே காப்பாய்—உன்
கடைவிழியாலே யென்னைக்காட்டிக்
கொடுத்திடாமல் கரையேற்றுவாய்
திக்கற்றபாவியென்று தீவிரம்வந்து உந்தன்
கருணைக்கடலையெனக்குக் காட்டுவாய்
உன்துணையல்லால் வேறுதுணையுள்ளதோ
உண்மை இதைச்சொன்னேன் உன்மனம் கல்லோ [த]

சரணம்.

கவலைக்கடலில் மூழ்காமலே எந்தனை
கைதூக்குவாய்—உன்
கருணைக்கடலை யென்மனம்
நிறைய ஊட்டுவாய்
பேதையென்றம்பாளை தள்ளிவிடாமலே
பிழைபொறுத்தவளை கூட்டுவாய்
அண்டினபேர்களுக்கு அனுக்கிரகம் தான்கொடுக்கும்
உன்னையல்லாலினி வேறுதெய்வமுண்டோ [த]

[16] நவராத்திரிக்கும்மி என்ற மெட்டு.

பல்லவி.

அதிசயம் கேளுங்கள் நவராத்திரி அதிசயம் கேளுங்கள் [அ]

சரணம்.

1. அதிசயம் கேளுங்கள் இந்த நவராத்திரி
புதுக்கோட்டை ஜமீன்தார் ஏற்பாடு செய்திட்டார்
நாளொருவிதமாயிருக்கும் நவராத்திரி
தெரிசனம் கண்டுமே ஆனந்தங்கொள்ளுவோம் [அ]
2. குற்றாலம் யென்ற ஊர்தனிலே நல்ல
முக்திபெற நல்ல மௌனஸ்வாமி மடம்

எத்திசையோர்களும் கண்டுதெரிசிக்க
இடமொன்றிருக்கிறது எல்லோரும் வாருங்கள் [அ]

3. பந்திபந்தியாக பிருமணாள் போஜனம்
பக்தியுடனவர் யேற்பாடு செய்திட்டார்
வந்தபேர்க்கு சற்றும் தடையொன்றில்லாமல்
போஜனம் போட்டிடும் சுந்தரமய்யர் தான் [அ]

4. பேதையென்றும்பாள் பிதற்றிட்ட கவியை
பெரியோர்கள்கேட்டு பிழைபொறுத்தருள்வீர்
சம்ஸாரபந்தத்தை தள்ளிவிட்டு நல்ல
முக்திபெறுதற்குமௌனஸ்வாமிமடம் [அ]

[17] ஞானக்கும்மி.

1. மானிடஜென்ம மெடுத்தோமே—நாம்
மாய்கையில் வந்து பிறந்தோமே
ஓயாக் கவலைக்குள் பட்டோமே—இது
எப்போ ஒழியும் சொல் ஞானப்பெண்ணே.

2. இந்தபெண் ஜென்மம் மெடுத்தபடியால்—நாம்
ஈடேற்ற ஓர்வழி தேடவேணும்
சம்ஸார பந்தங்கள் விட்டுவிட்டு—நன்றாய்
மனதை யடக்கச்சொல் ஞானப்பெண்ணே

3. வீட்டு வேலைகள்ஒழிந்த நேரமெல்லாம்
அவி விவேகந்தை விட்டுவிட்டு
சேரநல்வழி இருக்குதென்றுசொல்லி
செப்புவாய் எல்லோர்க்கும் ஞானப்பெண்ணே.

4. மனதை ஒன்றாய் நிறுத்திவிட்டு—நல்ல
ராமநாமங்கள் ஜெபிக்கவேணும்
ஒருநிமிஷ மாகிலுநாமத்தை
உச்சரிக்கச்சொல் ஞானப்பெண்ணே.

5. எட்டும் இரண்டும் தெரியாதபேதை—நான்
எடுத்துச்சொன்ன இந்தக்கும்மியை
தப்பிதம் வந்தாலும் பார்த்துத்திருத்தியே
அம்பாளைத்தேற்றுவாய் ஞானப்பெண்ணே.

[18] சேந்தில்வேலவா யென்ற மெட்டு.

1. தெண்டாயுதனே வந்தனம் செய்தேன்
கண்டுமனங்களித்து கவலையை விண்டேன்
கா—ப்பாய்—கா—ப்பாய்
எந்தனை எந்தனை எந்தனையுமுண்மையாய் [தெ

2. இத்தனைவாது இந்த ஏழையின் மீது
செய்வது உந்தனக்கு தர்மமோ சொல்லாய்
உந்—த—னை—யே நம்பினேன்
நம்பினேன் நம்பினேனே உந்தனை

3. உந்தன் மகிமையை யாரால் அறியலாம்
தேவாதி தேவர்களும் அறிவதற்கு வல்லரோ
தெ—ரி—யு—மோ—தெரியுமோ
தெரியுமோ தெரியுமோ உன்மகிமைதான் [தெ

4. எத்தனைகோடி ஜென்ம மெடுத்தாலும்
உந்தன் தெரிசனம் எவர்களுக்குக் கிட்டுமோ
சொல்—லாய்—சொல்—லாய் சொல்லுவாய்
சொல்லுவாய் சொல்லுவாய் மனம் வெல்லுவாய் [தெ

5. ஸ்ரீ சக்கிர பீடத்தில்அமைந்திருப்போனே
எந்தெந்த ரூபத்திற்கும் இசைந்தரூபம் கொண்டோனே
கை—யி—னி—ல்—கையினில்
கையினில் தெண்டமோடு நிற்பவனே [தெ

[19] ராகம் பலஹரி தாளம்—ஆதி.

பல்லவி.

தெண்டாயுதபாணிதனையே
கண்டுதெரிசனம்செய்தால் கர்மங்களும் தீரும்சொன்னேன்

சரணம்.

1. முக்திபெறவேணுமென்றால் மௌனஸ்வாமி மடமாகும்
எத்திசையோர்களும்வந்து இருக்க நல்லிடமாகும்
தீராதபிணிகளெல்லாம் தீர்க்கப்பட்ட மஹானவர்
பாதம்பெறவேணுமென்றால் பக்திசெய்துபெறலாமே. [தெ

2. கண்டவுடனெல்லோர்க்கும் அடங்காத ஆனந்தமும்
பக்தியில்லாமூடருக்கு பக்தியை பெருகும்படி
செந்தாமரைமுகத்தோடு வந்தபேர்க்குத்தெரிசனம்
தடையொன்றுமில்லாமலே அந்தமஹான்தான்கொடுப்பார்

3. அவர் பக்திதனையுட்கொண்டு ஹஸ்தத்தினால் விபூதி
எவ்விதத்தினாலுமதை பெற்றிடவேணுமென்று
பேதையென்றுமம்பாளும் வணங்கி அண்டையில்வந்து
பாதம்பெறவேணுமென்று பக்தியுடனே பணிந்தாள். [தெ]

[20] முத்துவீராயி யென்ற மெட்டு.

1. சிரிஞபர் ஸ்வயம்ஜோதியதாம் மௌன
தேசிகனும்குரு தன்னருளால்
பாரில்தெண்டபாணி பிரதிஷ்டை...
பாலன் கணபதி காப்பாமே.

2. துன்பமகற்றி சுகமளிக்கநல்ல
ஸ்ரீசக்ரபீடத்தில் வீற்றிருக்கும்
தெண்டாயுதபாணி கும்பிட
தேவிசரஸ்வதி காப்பாமே

3. கும்மியடிபெண்கள் கும்மியடியுங்கள்
குற்றாலநாதரை போற்றிசெய்து
இம்மைமறுமை பயனிருக்கயிசை
இயற்றிக் கும்மியடியுங்கடி

4. ஆயிரத்தெண்பத்தி ஐந்தாம்வருஷம்
புரட்டாசி ஒன்பதாம்தேதியிலே
மௌனகுருஸ்வாமிமடம் தன்னில்
பிரதிஷ்டைஆனதை கேளுமயிலே

5. மௌனஸ்வாமிகளென்ற ஒருமஹான்
அந்தவருஷத்தி லங்குவந்து
லோகஉபகாரமாகவே அங்கொரு
ஆலயம்ஏற்பாடு செய்துவைத்தார்

6. எட்டியாபுரம் புதுக்கோட்டைபுகழ்
பெற்றசேத்தூர்ஜமீன் மூவர்களும்
எடுத்தஜென்மம் ஈடேறவே அவர்கள்
இயன்றமட்டும் உபகாரஞ்செய்தார்கள்

7. மூலமந்திர மறிந்துசொன்னகுரு
மூர்த்தி தெண்டாயுதபாணியென்று
ஞானம்புகழும் நாமமளித்துஸ்வய
ஞானகுருவங்கமைந்திருந்தார்

8. தேடித்திரிந்ததனம் கிடைத்தாப்போல்
மௌனஸ்வாமி மஹானைக்கண்டு
தினம் காலைமாலை தெரிசித்தால்
ஜெனனமரணம் தீர்ந்திடுமே

9. தீராதநோய்களை தீர்க்கவைக்கப்பட்ட
ஸ்வாமிதெண்டபாணி விபூதியை
நேராகபிருகரத்தினால் வாங்கியே
நெற்றியிலேதினம் இட்டுவந்தால்

10 குன்மவியாதி பெரும்வியாதி கெட்ட
கர்மங்களான பிணிகளெல்லாம்
நிர்மலசித்தராம் மௌனமஹான்தன்னை
நினைத்தவுடனே தீர்ந்துவிடும்

11 எத்திசையும்புகழ் தெண்டாயுதபாணி
எதிராகவே யிருக்கவைத்து-தன்னை
அண்டினபேர்க்குப தேசஜெடங்கள்
அதிரகஸியமாயுரைப்பார்

12 அவ்விதமாயுப தேசம்பெற்றுக்கொண்டு
அந்தக்கரண சுத்தியுடன்
செவ்வையாகதினம் ஜெபம்செய்துவந்தால்
ஜென்மசாபல்ய மாகுமேதான்

13 ஜோதியடி ஸ்வயம் ஜோதியடி—அவர்
துய்யதெண்டாயுத பாணியடி
பேதையென்னுமம்பாள் பிதற்றிட்டகும்மியை
பிழையகற்றியே பாடுங்கடி

[21] காவடிச்சிந்து

என்னடிநான்பெற்றமங்கை யென்ற மெட்டு,

1. தெண்டாயுதனைக்கண்டால் மனம்கசிந்து
ஞானம்பிறந்து ஜன்மம்சாபல்யமாகுமேகேளீர்
கண்டவுடனெல்லோர்க்கும் ஆனந்தங்கொள்ளுமே
நானறிந்துசொன்னேனே-இதைக்கேளும்
அந்தமௌனஸ்வாமி மடம்தானே

2. என்னசொன்னாலும்தானென்ன புத்திக்கெட்டுமா

ஞானம்வருமா இதையறிந்துசொல்ல யாரால்முடியும்
தெண்டாயுதபாணியைக் கண்டுதெரிசிக்க
எல்லோரும்ஒன்றாக வாருங்கள்—அதை
கண்டுகளித்துமே, கூறுங்கள்

3. இன்னும்என்னசொல்லவேணும் இதுகாணும்
இந்த க்ஷேத்திரமகிமையைக்கேளும்
எப்படியாகிலும் கண்டுதெரிசித்தால்
பக்திமுக்திகளும்உண்டே-இந்த
பேதையம்பாள் சொல்லைக்கேளும்

[22] பாலவாய்கமுகுவந்த என்ற மெட்டு

காவடிச்சிந்து

1. தெண்டாயுதபாணியை நீ கண்டு தெரிசனம்செய்தால்
பவபயங்களும் அற்றுப்போகுமே—கர்ம
பந்தங்களும்விட்டு தூரமேபகுமே

2. இன்னும்என்ன எந்தன்மீதில் இத்தனைவாது உனக்கு
இரக்கமற்றநெஞ்சம் உனக்குள்ளதோ-வேலா
இன்னமும்நான் எந்தவிதம்சொல்லுவேன்

3. பெந்தங்களறுக்கப்பட்டு பிரபத்தைஉணரும்வழி
எந்தவிதத்திலும் எனக்கூட்டுவாய்-நீயும்
அம்பாளைத் தள்ளிவிடாமல்போற்றுவாய்

[23] ஆறுமுகவடிவேலவனே—என்ற மெட்டு,

காவடிச்சிந்து

1. தெண்டாயுதனையே வந்தனஞ்செய்தால்
ஜென்ம சாபல்யமுண்டே-சற்றும்
கற்றுணர்ந்ததையே அறிந்தஜெனங்களுக்கு
பக்திமுக்தியுண்டே

2. திரிகாலபூஜைநடக்கின்ற அழகை
என்னசொல்லுவேநான்—இந்த
அதிசயம்எங்குமே கண்டதில்லை-இந்த
மடத்திலேகண்டேனே

3. கையில்தெண்டமோடு நிற்குமழகை
என்னசொல்லுவேன் நான்—அவர்
வந்தபேர்களுக்கு பக்திகொடுக்கும்-அந்த
மௌனஸ்வாமிமடம்

4. தினம்தினம் அங்குவேதகோஷங்கள்
முழங்கிவருகவே—நல்ல
பாகவதர்களும் திருப்புகழ்பாடிட-அதை
எல்லோரும் கேட்டு ஆனந்திப்பார்

5. பேதைபோலேயம்பாள்சொன்ன கவியை
எல்லோரும்கேட்டுமே-இதில்
பிழைகளிருந்தாலும் பொறுத்தருள்வீர்கள்
பெரியோரே கேளுங்கள்

[24] ராகம், காப்பி, ஏகதாளம்,
பூசுவதும் என்ற மெட்டு,

1. தெண்டாயுதபாணியை வந்தனம்செய்தேன்நான்
என்மனம்மகிழநல்ல தெரிசனம்தருவாயே

2. பிரமத்தை உணருதற்கு அறிவைத்தரவேணும்
கர்மங்கள்போக்கிவிட்டு பவங்களைபோக்கவேணும்

3. மண்ணாசை,பெண்ணாசை,பொன்னாசை மூன்றும்விட்டு
காமமென்றபேயைபோக்கிகருணைக்கடலைத்தேக்கிடுவாய்

4. எந்தெந்தவிதத்திலும் பிரமத்தைஉணரவேணும்
பாவங்கள்போவதற்கு மௌனஸ்வாமிமடமதிலே

5. ஜெபதபங்கள்செய்வதினால் பாவங்கள்போவதில்லை
மனதையடக்கிநல்ல முக்திவழிதேடவேணும்

6. டம்பத்திற்காகஒரு தானங்கள்செய்தாலும்
வைராக்கியபக்திதனை செலுத்தியதைசெய்யவேணும்

7. நிற்கெதியம்பாளை நின்பதமேசேர்க்கவேணும்
பரகெதியாய்யிருப்பவளை வந்துநீகாத்திடு...

[25] ராகம், தேசிகதோடி, தாளம், சாப்பு.

பொன்னார்மேனியனே என்ற மெட்டு,

1. தெண்டம்பிடித்தவனே தேவாளைக்காப்பவனே
அண்டினபேர்களுக்கு அனுக்கிரகம்செய்பவனே
உன்போல்எவர்களுக்கும் இந்திரஜாலத்தைக்கண்டதில்
என்மேல்கருணைவைத்து என்கவலையைதீர்ப்பாயே [லெ

2. ஏழைமீதில்வாதுசெய்வது தர்ம்மமோ-உன்
கடைவிழியாலேஎன்னை கருணையாய்பார்த்திடுவாய்
எந்தெந்தவேளையிலும் நானுன்னை துதிக்கும்படி
என்மனதிற்குள்ளே ஞானம்இப்போதேயூட்டுவாய்

3. நின்பாதம்சாக்ஷிபாக நானுன்னையேநம்பினேனே
எனக்குற்றதுணையுண்டோ உண்மையறிந்துகொள்வாய்
பேதையம்பாளைநீயும் பின்புறந்தள்ளிடாமல்
உன்புரத்திலென்னை வரவென்றழைத்துக்கொள்வாய்

(26) கண்களிரண்டும் மெ. மெ. திருவாசகம்.

1 கையினில் தெண்டம் பிடித்தவனே உன்னை
தெரிசிப்பதெப்போது என்
கண்களிரண்டும் பஞ்சடையும் முன்னே நான்
கண்டு களிப்பேனோ

2. கூற்றுவன் வந்து கூப்பிடுமுன்
என்னைக்கூப்பிட்டுக்கொள்ளாயோ நான்
சொல்லும் சொற்களை செவிகளில் கேட்டு
இரக்கம் வைத்தாளாயோ. [க

3. உன் பாதாரவிந்தம் துணையன்றி யெனக்கு
வேறு துணையாருண்டு இது
உண்மையல்லால் வேறு உற்றார் பெற்றார்
ஓர் துணையுமில்லையே. [க

4. ஸம்ஸார பெந்தத்தில் அகப்பட்டுழன்று நான்
பாவியாய்ப் போனேனே உன்
பாதார விந்தம் சேர்வதர்க்குவழி
எவ்விதம் காட்டுவாயோ. [க

பேதையென்றுமப்பாள் சொன்ன
கவிகளில் பிழைகளிருந்தாலும் அதை
திருத்தி எல்லோருமாக
அனுக்கிரகம் செய்வீரே.

27 மலடி வயிற்று மகன் போலே—மெய மெ.

1. தண்டாயுதபாணியே உன்
ஸ்துதிகள் சொல்லி பாடுதற்கு
என் மனம் கசிந்து உருகும்படி
என்னுவில் வருவாயே,

2. கண் திறந்து என்னைப்பாராயோ என்னை
பார்த்தொருவார்த்தை நீ சொல்லாயோ
உன் மனம் சற்றும் இரங்காதோ
என் மீதில் வாதேனோ.

3. எத்தினை தரம் நான் சொல்லியும் உன்
செவிகளில் சற்றும் கேழ்க்கிலேயோ
யேழை மீதில் வாதுனக்கு
இதுவும் தர்மமோ.

4. மந்தமதிகளைப்போக்கும் வழி எனக்கு
எவ்விதத்திலும் ஊட்டுவாயோ
உன் துணையல்லால் வேறுண்டோ
இதை மறவாதே.

5. கருணைக்கடலே தந்து எனக்கு நீ
நின்பதமே நான் சேருதற்கு
அறிவைத்திறந்து உன் தெரிசனம்
நீயும் தரவேணும்.

6. காமமென்கிறபேயை துரத்தி நீ
கருணை ரசத்தை போட்டி எனக்கு நீ
உன்னடைக்கலமாகவே எந்தனை
நீயும் சேர்ப்பாயே.

7. பேதையென்றம்பாளை தள்ளிவிடாமல்
உந்தனைக்கண்டு தெரிசிக்க
எந்தவேளையிலுன்மனம்
இரங்குமோ

28. ஷண்முகானந்த குரு. யெ.மே.

1. தெண்டாயுதன்னேயே வந்தனம் செய்திட்டால்
கர்ம பெந்தங்களும் விட்டு நீங்கிடுமே [தெ]
2. எங்கெந்த ஊரிலும் இந்த யேற்பாடுகள் போல்
இந்த ஆலயம்போல் எங்கும் நான் கண்டதில்லே [தெ]
3. வந்தபேர்கட்கெல்லாம் அன்னம் தடையில்லாமல்
பசியாற்றி போவதற்கு மடமொன்றுகட்டியங்கு [தெ]
4. பந்தி பக்ஷமில்லாமல் பார்த்து விசாரிக்க
விப்பரர்களாகவே வித்வான்களே யேற்படுத்தி [தெ]
5. பேதைபென்னும்ம்பாளும் பெண்புத்தியாலேசொன்ன
கவிதன்னே கேட்டுமே எல்லாமன முகப்ப [தெ]

29. ராகம் அடாணு தாளம் ஆதி.

பல்லவி,

உண்மை யுரைக்கவேணு குருவே
உந்தன் பாதம் பணிந்தேன் [உ]

அனுபல்லவி;

உற்றருமில்லே உறவினருமில்லே
பெற்றருமில்லே வேறு துணையுமில்லே
நடந்த சேதிதனே யாவையும்
மனதிரங்கி உரைக்கவேணும். [உ]

சரணம்

1. கற்றறியாத மூடமேயாம்
கல்வி யறிய மூடமே யாம்
பேதையென்று மனமிரங்கி
பிதற்றுகிறதை உரைக்கவேணும்.
2. பிரம்மமென்ற வஸ்துவை நம்பி
பிதற்றியே நான் கேழ்க்கலுற்றேன்
உள்ள உள்ளபடி சொல்லவேணும்
உந்தன் பாதம் சாக்ஷியாக. [தெ]
3. உந்தன் மகிமையை நானறிவேனே
ஒன்றுமறியாத மூடம்தானே

யேழைமீதில் கருணை வைத்து
இயம்பவேணும் இச்சொல்லைத்தான் [உ]

4. அறிந்தறியாத பிழைகள் செய்தாலும்
ஆதரிப்பாருண்டுலகில்
ஒன்றுமறியா பேதையின் மீதில்
வாதுனக்கு தர்மமோ சொல்லாய். [உ]

31. திருக்குற்றாலத்திலிருக்கும் மௌன சுவாமிகள்
வரவை யறிந்துரைக்கும்படி சுருதியாகிய பல்லியையேவியது

1. மௌனகுருவான மங்கள மூர்த்தி
மஹானைக்காண நான் ஆவல்கொண்டேன்
அவர் இருக்கும் திசையை நோக்கி
அழைத்திடாய் கோழி குல குருவே இங்
கழைத்திடாய் கோழி குலகுருவே

2. நாடு நகரமில்லாத குரு
நாதனைக்காண நான் ஆவல்கொண்டேன்
அஷ்டலெக்ஷ்மி பொருந்தியோனே
அழைத்திடாய் கோழி குலகுருவே இங்
கழைத்திடாய் கோழி குலகுருவே

3. மெய்யர்க்கு மெய்யான மெய் குருவாம்
நாதனைக்கண்டு நாம் நன்மை பெற
அண்டமதிர திசைபை நோக்கி
அழைத்திடாய் கோழி குலகுருவே இங்
கழைத்திடாய் கோழி குலகுருவே.

4. நிஷ்டையிலே யிருக்கும் மௌன குருவை
நிர்மலமாகநான்காணவென்று
அவர்யிருக்கும் திசையைநோக்கி
அழைத்திடாய்கோழிகுலகுருவே யிங்
கழைத்திடாய்கோழிகுலகுருவே.

5. காக்ஷிகொடுக்குமந்தஸத்குருவை
காணவேணுமென்று ஆவல்கொண்டு
குற்றாலவூரிலிருக்கும்நாதனை
கண்டேனென்றுசொல்லிகூவுகோழி நான்
கண்டேனென்றுசொல்லி கூவுகோழி.

6. எத்திசையும் புகழ்பெற்றகுருவே
எந்தனுக்குகாக்ஷிதந்தகுருவே
இன்னுமம்பாளுக்கருளவென்று
அழைத்திடாய்கோழிகுலகுருவே யிக்
கழைத்திடாய்கோழிகுலகுருவே.

32 ராகம் பூபாளம்.

1. அருணோதயம் தன்னில் எழுந்திருந்து
அருவியில் ஸ்நானம்செய்து
மங்களமான குருவை தெரிசித்து
மந்தமதியை அகற்றுவோம்.

2. குருவைத் தெரிசித்து வந்தனங்கள் செய்து
விபூதிகரத்தினால் வாங்கி
அங்கம் முழுதும் செய்தபிணிபோக
அந்தக் கரணசுத்தி செய்துகொள்

3. அந்தக் கரணசுத்தி செய்துகொண்டு
ஆண்டவனெதிரி லிருந்து
மனதை ஒன்றாக நிலைபாகநிறுத்தி
ஜெபங்கள் செய்து முடித்துக்கொள்.

4. அடியின்றி முடிவன்றி அழிவில்லாத குருவே
ஆனந்தமாகவே வேண்டி—அவர்
அனுக்கிரகங்கள் பெற்று அதிரகஸ்யமாய்
முக்தி பெற்று நாம் வருகுவோம்,

5. எத்தனை ஜென்மமோ எடுத்து யெடுத்து
இந்த அவனியில் வந்து பிறந்திட
பிரமத்தைக்கண்டு அறிந்துகொள்ளும்படி
அம்பாள் அனுக்கிரகம் செய்யுங்கள்,

## திருக்குற்றாலத்திலிருக்கும் மௌன ஸ்வாமிகள் வரவை அறிந்துரைக்கும்படி மறயெனும் பல்லியை யேவினது.

1. ஆதியந்தமற்ற ஸ்வயம் ஜோதிவருமாகில்
அகண்டமயமான சிவரூபன் வருமாகில்

ஜாதிபேதமற்ற ஞான அப்பன் வருமாகில்
துலக்கமற்ற நல்லதிசை சொல்லு சிறுபல்லி.

2. ஸூத்தநிலைகண்டு ஸ்வயம் ஜோதிவருமாகில்
நித்திய கல்யாண குணமூர்த்தி வருமாகில்
நிர்மலமயமான மௌனன் வருமாகில்
இன்னும் ஒருக்கால் வரவு சொல்லு சிறுபல்லி

3. அலையும் மனம் நம்மிடமமர்ந்துவிடுமாகில்
மாமறை பேசும் பொருள் மகிமை வருமாகில்
தேடறியா ஜோதியவன் இங்குவருமாகில்
துருஸாகவே அவர் வரவை சொல்லு சிறுபல்லி

4. நிஷ்டையிலிருக்கும் குரு இங்குவருமாகில்
நிர்மல சுத்தஞன ரூபன் வருமாகில்
அஷ்டதிக்பாலகரை அணையவருமாகில்
ஆனந்த குருவரவை சொல்லு சிறுபல்லி,

5. பக்தர் பவத்தை பரிகரிக்கும் பரமன் வருமாகில்
மெய்ப்பொருளை எனக்களித்த அப்பர் வருமாகில்
குற்றம் சொல்லா அம்பாளை குற்றம் சொல்லுமாகில்
குணமறிந்து நல்லறிவை சொல்லு சிறுபல்லி.

34. மங்களம்.

பல்லவி

மங்களம் சொல்லுவோமே தெண்டன்மீதில்

அனுபல்லவி

மங்களம் சொல்லுவோம் தெண்டபாணிமீதில்
மகிமை பொருந்திய மௌன குருவுக்கு [மங்க]

சரணம்,

1. ஸ்ரீ சக்கிர பீடத்தில் அமைந்திருக்குமழகும்
பக்தாளை ரக்ஷிக்கும் பரிபூரணனுக்கு ]மங்]

2. ஆதியில் ஸ்ரீசங்கரி குரு பிரதிஷடை செய்த
தரணீபீடத்தில் அமைந்திருப்பவர்க்கும் [மங்]

---

தெண்டாயுதபாணி பாட்டுகள் முற்றிற்று.

# திருச்செந்தூர் சுப்பிரமணிய ஸ்வாமி பேரில் இயற்றப்பட்ட கீர்த்தனைகள்

பல்லவி,

1. வருவாய் லெக்ஷுமித்தாயே என்கிரகத்திற்கு
தருவாய்வரமிப்போதே [வ]

அனுபல்லவி,

வருவாய் லெக்ஷுமித்தாயே தருவாயவரமிப்போதே
தயங்காதே என்று நீ அருகில்நின்று இப்போ [வ]

சரணம்.

தஞ்சமென்றுனைவரிர்தேன்-ஹே
மஹாலெக்ஷுமி தள்ளிவிடலாகுமோ
தள்ளிவிடலாமோ தான்னியவரலெக்ஷுமி
மங்களாகயென்கிரஹத்தில் வஸிப்பாயிப்போ [வ]

2. சுப்பிரமணியர் ஓடம்

சக்திகணபதியே சந்ததமும் உதவய்யா
சுக்கிரவாரம்தப்பாமல் உந்தனுக்கு
தேங்காயுடைப்பேன்
வேலன்மேல் கப்பல்பாட
வந்துதவவேண்டுமய்யா
ஸரஸ்வதியே என்தாயே
சரணமுன்னைபணிந்தேனம்பா

முடுகு

1. ஆதியில்பார்வதி பரமனுடன்சேர
அந்தச்சமயத்தில் தேவர்முறையிட
வெக்கித்துபார்வதி வெளியே ஓட
ஸ்வாமிக்குதாபம் பொருக்கமுடியாமல்
அக்கினிபகவான்கையினிகுடுக்க-அவர்
தாங்கமுடியாமல் நதியிலேபோட
கெங்காபவானியும் பொருக்கமுடியாமல்
சரவணையென்றநதியிலே ஒதுக்க
ஆனந்தமாகவேவல்ம்பொங்கி வளர

இப்படியிருக்கவே அம்மனொருதினத்தில்
பரமனைப்பார்த்தொருவார்த்தைதனைச்சொல்வாள்-நான்
பாலனில்லாமலே பாதவிப்பதை
பார்த்துசகித்து இருப்பதறியாயோ
என்றுசொல்லியம்மனு ரமனிடம்கேழ்க்க
அம்மனைப்பார்த்தொரு வார்த்தையைச்சொல்லுவார்
சுவாமியுடனே விமானம்தனிலேறி
ஏகாந்தமாகவேயிருபேரும் வருக
அப்பொழுது சுவாமியும் அம்மனைப்பார்த்து
ஆனந்தமாகவோரு வார்த்தைதனைசொல்லுவார்
இருபேருங்கூடிவிமானம் விட்டிறங்கி
வேடிக்கையாகவே யம்மனைப்பார்த்து-அதோ
சரவணையிலிருக்கின்ற பாலகர்களெல்லாம
உன்னுடையது என்று சுவாமியும் சொல்ல
அம்மனும் கேட்டுடன் ஆனந்தம் பொங்கி
ஆறுகுமாரரையும் அம்மனுடகையால்
ஆவலுடனே வாரியணைத்து
வாரியணைக்கவேகுமாரர்களப்போ
ஒன்றுகவேசேர்ந்துவிட்டபடியால்
ஆறுமுகரென்று நாமமளித்தாள்
அம்மனுக்கு கொங்கையில் பாலுஞ்சுரக்க
ஆனந்தமாகவே கிரஹந்தனில்வந்து
ஆறுமுகவருடன் வேடிக்கைபார்த்து
ஆனந்தமாகவே இருக்கிறுளய்யா ஏலேலோ
தத்தைய்யாஏலேலோ.

2. இப்படியாகவேயிருக்குமொருநாளில்
வேலனுமனதிலே வேட்டையாடயெண்ணி
காடுவழியாகவே வருகிறபோது
வேடர்குலத்தில் பிறந்தஒருமாது
தினைப்புனம்காப்பதை வேலவர்கண்டு
அவளுடையபேரி.. மிக ஆவலுங்கொண்டு
வேலவரும் அந்தயிடம்வந்துமேசேர்ந்து
வேடிக்கைய கவே மாதுதனைபார்த்து

யார்பெண்ணேமாது நீ தனிமையாயிங்கே
இருக்குமந்தசேதியை எந்தனுடனுரைத்தால்
உந்தனைஇப்போதே மாலையிடுவேண்டி
இப்படிவேலனுமவளுடனுரைக்க
அந்தமொழியைகேட்டு மாது தலைகுனிந்தாள்
கோபத்துடன்மாது வேலனைபார்த்து
யாரடா, நீயிங்கேவருவானேயென்றாள்
என் அண்ணமார்கண்டால் சிக்ஷைசெய்வார்கள்
என்றஉடன் வேலனும் மறைவாக நின்று
மாதுக்கு நிசரூபங்காட்டவேநினைத்து
மயில்மீதிலேறியே வேலுங்கைகொண்டு
மாதுக்குஎதிராகவந்துமேநிற்க
அப்பொழுதுமாதுவும் ஆனந்தங்கொண்டு
மனமது மகிழ்ந்து மங்களமாக
இருபேருமாகவே மணமாலைசூடி
கல்லியாணம்செய்துகளிப்புடன்
வாழ்ந்திருந்தா ஏலேலோ தத்தையா ஏலேலோ

3. அப்பா ஒருசேதிகேளும் யெ மெ.

சிந்து

செந்தூரில்வசிப்பவனே வேலவா
உந்தனையே தினம் தினம் நினைந்தேன்
வாவென்றழைத்தேனுன்னை வேலவா
வந்துவரம்இப்போதேதந்திடவேணும்
வாவென்றழைத்தாலிப்போ வேலவா
வருத்தங்கள்கொள்ளாமல் வந்திடவேணு
கேட்டவரங்களெல்லாம் வேலவா
கிருபையுடனேயெனக்கு தந்திடுமய்யா
தஞ்சமென்றுனையடைந்தேன் வேலவா
தள்ளிவிடப்போதகுமோவப்பா
சரணமென்றடைந்தேனே வேலவா
தயங்கவிடாமலென்னைக்காருமய்யா
சாகரபக்ஷியைப்போல வேலவா
நானிப்போமெத்தகதறுகிறேன்

சற்றேனுங்கேழ்க்கிலேயோ உன்செவி
தாமஸம்செய்யாமலிப்போ ஓடியேவாரும்
சரணம்சரணமய்யா சரவண
தப்பிதமிருந்தால் பொருத்தருளுமய்யா
சரவணஉந்தனையே நம்பினேன்
நம்பினேன் நம்பினேன் நம்பினேனய்யா

4. சீர்மேவும்தில்லை ய. மெ.

கும்மி

1. எங்கள் திருச்செந்தூராண்டி அவன்
இயம்பும்வரங்கள் கொடுப்பாண்டி
யெங்குமில்லாத புகழாண்டி அவன்
கீர்த்தியைசொல்லியே பாடுங்கோடி
2. சரவணை தன்னிலுதித்தாண்டி அவன்
தகப்பனுக்குபுத்தி சொன்னாண்டி
சதுர்முகனைசிறையில்வைத்தான் அவன்
சத்தியவாக்கியத்தை தாண்டாண்டி
3. கொம்பனுக்குமுன்னே சென்றாண்டி அவன்
பூலோகவாழ்வையறிந்தாண்டி
அம்பிகைபாதத்தை போற்றிசெய்து அவன்
ஆனந்தக்கனியைக்கொண்டாண்டி
4. அஸுரர்குலத்தைவதைத்தாண்டி அவன்
அன்பருக்குகிருபை கொண்டாண்டி
வள்ளி தெய்வானை புகழாண்டி அவன்
வணங்குவர்க்கு கிருபைசெய்வாண்டி
5. சக்தியும் வேலுங்கைகொண்டாண்டி அவன்
அண்டினபேரைக்கைவிடாண்டி
பிரணவத்துக்குபொருள் சொன்னாண்டி பரி
பூரணனைக்கண்டு பாடுங்கோடி

5. கொண்டுவா கொண்டுவா ய மெ.

பல்லவி

ஓடிவா ஓடிவாயே வேலவா
ஓடிவா ஓடிவாயே [ஓடி]

அனுபல்லவி,

உற்றபேசி சொல்லி
எந்தன்மனம்மகிழ [ஓடி]

சரணம்

1. உந்தனைக்காணவென்று வேலவா
உள்ளம்தன்னில் நினைந்தேன்
தாமஸசெய்யாமலிப்போ
வந்திடவேணுமய்யா [ஓடி]

2. பாபபுண்ணியமில்லா வேலவா
பாமரஜெனங்களுக்கு
காருண்ணியமூர்த்தியாய்
கண்ணின்முன் தோன்றிட [ஓடி]

3. ஷண்முகா எந்தன்குரல் உன்
செவியில்கேழ்க்கவில்லையோ
அருளானந்தக்கடலே
அம்பிகைபாலா நீ [ஓடி]

4. ஈராறுகையினாலும் வேலவா
எனக்குவரம் அருள
பாருக்குள் உனையன்றி
ஆதாரம்வேறுண்டோ [ஓடி]

5. பாபஜென்மத்தைப்போக்கி வேலவா
பரமபதமளித்து
பரமானந்தக்கடலே
முற்றும் தாயெனக்கு [ஓடி]

6. ஏனென்றுகேழ்க்கிலையோ வேலவா
இத்துயர்க்கென்னசெய்வேன்
சின்னவர்மீதிலுனக்
கித்தினைவாதாகுமா [ஓடி]

7. வள்ளிதெய்வானையுடன் வேலவா
மாமயில்மீதிலேறி
மகிழ்வாகவேயிப்போ
எந்தனுக்குகாக்ஷிதா [ஓடி]

6. அப்போது மீனாக்ஷி யெ. மெ.

1 ஆறுமுகவேலவனே ஆறுமுகவேலவனே
இப்போதே ஓடிவாயே
உந்தன்தெரிசனத்தை வேலவா
காணவேநான் ஆவல்கொண்டேன்

2. கருணைக்கடல்கடலே கருணைக்கடல்கடலே
காருண்ணியமூர்த்தியை
காணவே ஆவல்கொண்டேன் வேலவா
வந்துதவவேணுமய்யா

3. அய்யாவேல்முருகா அய்யாவேல்முருகா
உந்தனடைக்கலம்
செந்தூரில் வாழ்பதியே வேலவா
துன்பவினைதீர்த்தருள்வாய்

4. காலபயம் தீர்த்துஎன்னை காலபயம் தீர்த்துஎன்னை
கார்ப்பாரோடி எந்தன் வேலன்
கண்பார்த்து எந்தனையே வேலவா
கரையேற்றிக்கொள்ளுமய்யா

5. சரணம் சரணமய்யா சரணம் சரணமய்யா
சக்திவடிவேல கையா
தாமஸம்செய்யாமலிப்போ வேலவா
கண்பார்க்கவேணுமய்யா

7. பாபம்சொய்யாதிருமனமே யெ. மெ.

பல்லவி

முருகனைத்தேடு நீ மனமே முற்றும்
அவனில்லாமல் ஆர்சொல் நீ மனமே [மு]

சரணம்

1. செந்தூரில்வாழும் குகனே இப்போ
சரவணபவனே நானுன்னை நம்பினேன்
தள்ளாமலே இப்போகாரும் வேலா
தஞ்சமென்று நானும் இங்குவந்தேனே [மு]

2. பாவத்தைபோக்கிற சீலன் அவனை
பற்றினபேர்க்கு இரங்கிறபாலன்

முக்திகொடுக்கிற வேலன்—அவன்
முக்கண்ணருடையபாலனும் வேலன் [மு]

3. உற்றார் உறவினரில்லை-வேலா
உன்னையேசதமென்று நம்பிவந்தேனே
பேசாதிருப்பது தகுமோ-வேலா
இந்தயேழைக்கிரங்கியே கண்பாருமய்யா

4. காமக்குரோதங்களற்று-இப்போ
கரையேறவழியை காட்டுவாய்நீயும்
ஸித்தாதிகள்செய்துவைத்த—நல்ல
புஷ்கரணீயென்றகூப்பிருக்கு [மு]

5. கோபங்கொள்ளாமலே வேலா—நீயும்
வந்துஎனக்கு தெரிசனம்தருவாய்
உன்னையேநம்பினேனய்யா-வந்து
ரெக்ஷிப்பாயே வேலவாயிப்போ

6. வாதுசெய்யாமலேயிப்போ-வந்து
எந்தனையேகாத்தருள் முருகா
கன்று இழந்தபசுப்போல்-நானும்
கதறுகிறநாதம் செவியில்கேழ்க்கிலையோ [மு]

7. வேலவாயென்றுகூவினேன்-என்னை
விட்டுவிடாமலே வந்தருளய்யா
உந்தனையேநம்பினேன்—வேலா
சரணம் சரணம் சரணமே அய்யா [மு]

8. பூசுவதும் யெ. மெ.

1. சங்கரனார் திருமகனே
பொன்கரவா பூஷணனே
எங்கும்பரிபூரணனே
ஏகவஸ்துவானவனே [ச]

1. பரமனுடபுத்திரனே
பார்புகழும் வேலவனே
பார்வதியாள் பாலகனே
பரமகிருபாகரனே. [ச]

3. ஏகவஸ்துவானவனே
எவர்க்கும் கிருபைகொடுப்பவனே
எப்பொழுதும் நினைப்பவர்க்கு
இரங்கிகைகொடுப்பவனே [ச]

4. கொம்பனுடசோதரனே
பிரமனுக்குபதேசம் செய்தவனே
அஸுரர்களைவென்றவனே
சுப்பிரமண்ணியா சரணமய்யா [ச]

5. எந்தனுடதமிழ்க்கிரங்கி
இப்பொழுதே ஓடிவா
காக்ஷிதந்துயெந்தனையும்-நின்
பாதமலர் சேர்த்திடுவாய். [ச]

9. பொன்னார் மேனியனே யெ. மெ.

1. சரவணபவனேயுந்தன்
தாளடிதனைப்போற்றினேன்
சரணம் சரணமய்யா—என்னை
ஆண்டருள்கொள்ளுமய்யா [ச]

2. இப்புவியில் நானும்-வேலா
உந்தனைக்காணுமலே
எத்தனைநாளிருப்பேன் வரம்
தந்தருள்வேண்டுமய்யா. [ச]

3. சரவணாஉன்செவியில்
சற்றேனும் கேழ்க்கிலையோ
சாந்தனேஎன்செய்வேன் வேலா
தெரிசனம்தருகுவாயே [ச]

4. செய்தபிழைபொருத்து
சிறியோனைகைதூக்கி
கருணைக்கடலே நீயும் வேலா
இப்போதே காட்டிடுவாய் [ச]

5. ஆலைக்கரும்புபோலே வேலா
அலையும்என்மனதை

அலையவிடாமலதை வேலா
அடக்கும் வழியைச்சொல்வாய் [ச]

6. சரணமென்றுசொன்னல் வேலா
தள்ளிவிடத்குமா உன்
தாளடிதன்னையே வேலா
நம்பினேன் நம்பினேனே [ச]

10 தேவாரம்

1. வேலாஎன்று உன்னை
ஓடிவாயென்றழைத்தேன்
கந்தா விந்தா வேலா இப்போ
ஓடியேவந்தருள்வாய்

2. வந்தருள்வேண்டுமய்யா வேலா
வரம்தர இப்போழுதே
வேலும் கையும் மயிலுடன்
என்முன்தோன்றிடவே
காக்ஷிதருகவேணும் வேலா
கடிந்துக்கொள்ளாமலிப்போ
கண்டுஉன்னை வரம் பெற்று
கண்கள் குளிர்வேனே.

11. கண்டாளே சீதை யெ. மெ

1. கண்டேனே சரவணனை ஸ்காந்தமூர்த்தியை
கண்டுமனமகிழ்ந்து கருணைபெற்றேனே [க]

2. வாருமய்யா வேலவரே பார்வதி பாலா
இந்தவேளை வந்துதவவேண்டுமய்யனே [க]

3. மேத்தபசியாகுதடி வள்ளியேதாயே
தேனும தினைமாவையும் அள்ளிக்கொடுப்பாயே [க]

4 தாகமெடுக்குதடி தய்யலேவள்ளி
போகுதடி எந்தனுயிர் தாபம்தணிப்பாயே [க]

5. வேலும் மயிலுடனே கண்டாளே வள்ளி
மனமகிழ்ந்து இருபேருமாய் ஸரஸம் செய்பவே [க]

6. கண்டுகொண்டேனிருபேரையும் காக்ஷிபெறவே
கண்டவுடனெந்தன் கலிகளைவிண்டேனே [க]

12. இங்கிலீஷ் நோட்டு மெட்டு

1. பார்வதியுடபாலனும்
பரமகிருபையாளனும்
பக்தர்க்கனுகூலனும்
பார்புகழும் சீலனும் சீலனும் சீலனும்

2. எங்கும்பரிபூரணர் அவர்
ஏகவஸ்துவானவர்
எண்ணினைக்கைவிடாரவர்
எண்ணியிருந்துபாருங்கள் பாருங்கள் பாருங்கள்

3. முக்கண்ணருடபுத்திரராவர்
கெணபதியுடசோதரர்
பக்திமுக்தி கொடுப்பவரவர்
முன்னிருந்து கார்ப்பவர் கார்ப்பவர் கார்ப்பவர்

ராகம் மோகனம் தாளம் ஆதி.

13. உத்தேசம் பதினறு வயது யெ. மெ,

பல்லவி

சரவணபவனே சரணம் சரணம்
ஆறுமுகவனே சரணம் சரணம்

அனுபல்லவி.

பார்வதிபாலா பரமதயாளா
பக்தர்க்கனுகூலா சரணம் சரணம்

சரணம்,

1. ஏழையென்றுமனம் இரங்கவும் நாதா
இரும்போ உந்தன்மனம் கல்லோ நீ சொல்லாய்
பாராதிபாரெல்லாம் அளந்தபரனே
பார்த்து எந்தன்கலிதீருமய்யனே [ச]

2. எனக்குற்றதுணையில்லை சரவணபவனே
உண்மையிந்தச்சொன்னல் அறியாதுபோலே
அம்பிகையுடையவலையிலகப்பட்டு
சற்றும்கண்பாராமல் இருப்பதுசரியோ [ச]

3. கந்தனையீன்ற காரிழையாளே
கண்பார்க்கசொல்யிப்போமைந்தனைப்போலே
கன்றுயிழந்தபசுவதுபோலே
கதறுவதுநான் தர்மமோசொல்லாய் [ச]

14. ராஜ ராஜ யெ. மெ.

ராகம் ஹிந்துஸ்தானி தோடி.
பல்லவி,
செந்தில்வாழும் கந்தனே நான்
உன்னைநம்பினேன் [செ]
அனுபல்லவி,
ஸ்ரீதரகாந்தனே உன்பாதம்
நம்பினேன் பாதமேகெதி [செ]
சரணம்.
செந்தில் வாழும் கந்தனே உந்தனை
சிந்தையில்நான்நினைத்தேன்
சீக்கிரமாகவே ஓடிவந்து இந்த
குறைகளை அகற்றுவாய்
சிந்தைமகிழதெரிசனம்தருவாய்
கெஜமுகசோதர மஹிதமதே
கந்தனே விந்தனே காத்தருள் என்னை நீ
கருணாஸாகரா கருணாஸாகரா கருணாஸாகரா

15 ராகம் மத்தியமாவதி சாப்பு
பல்லவி
ஐய்யனே முருகய்யனே சரவணா
நம்பினேன் நம்பினேனே [ஐ]
அனுபல்லவி
ஐய்யனே முருகய்யா அன்பர்க்கு அன்பனே
ஆனந்தரூபனே ஆறுமுகவனே
சரணம்
1. சரவணயிலுதித்தாய் ஷண்முக
ரென்றபெயருரும்படைத்தாய்

தத்துவப்பொருளை நீ சரவணா
தகப்பனுக்குரை செய்தாய்
பிரமனைசிறையில் வைத்தாய்
பிராணிகளை சிருஷ்டித்தாய்
பத்மசுராதியாம்
அஸுரர்களை வதைத்தாய் [ஐ]

2. வள்ளியைச்சிறை யெடுத்தாய் சரவணா
வேடருக்காய் ஒளித்தாய்
வேங்கைமரமாய் நின்றாய் மயிலுடன்
வேடர்க்குகாக்ஷிதந்தாய்
மயில்வாகனரூட ராய்
மதிமுகத்தைக்கண்டு
மயங்காமலே வேடர்
தங்கையை தந்திட்டார் [ஐ]

3. சரணம் சரணமய்யா எந்தனை
காத்தருள்வேணுமய்யா
மைந்தனைபபோலே என்னை சரவணா
தளராமல்காருமய்யா
காயும் கனியும்போல்
தேனும் பாலும்போலே
எப்பொழுதும் எந்தன்
இடத்திலேயே வசிப்பாய் [ஐ]

16 ராகம் கமாஸ் தாளம் ஆதி.

பல்லவி

ஸ்கந்தா உந்தனை நாடி எந்தன் குறைகள்
தீர வந்தேனே சிவமைந்தா [ஸ்க]

அனுபல்லவி

விந்தை விந்தையாகவே பாடிக்களித்திட
பாடிக்கமாஸ்ராகம் தேடியேபாடிட [ஸ்க]

சரணம்

1. கோடிகோடியாகவே பாடிப்பாடிட நானும்
வாடிவாடியேயிப்போ நாடிநாடியேவந்தேன் [ஸ்க]

2. காலையும்மாலையும் கண்டுகளித்திட
கருணைபுரிவாய் சரவணபவா நீயும் [ஸ்க]

3. நாதனேநீயல்லால் வேறுதுணையார்சொல்லாய்
விமலனேநானுந்தன் திருவடிகெதியென்றேன் [ஸ்க]

17. யெந்துகுவா லடகினுடு யெ. மெ.

பல்லவி

காணவேநான் ஆவல்கொண்டேன்
வந்துகாக்ஷிதருவாயோ ஸ்கந்தா [கா]

அனுபல்லவி

காணவென்றால் தூரமாகுதே
வந்துகாக்ஷிதந்திடுவாயே [கா]

சரணம்

பத்மாசுரனை வதைத்தவேலா
பரமதயாளா
பார்வதிபாலாமைந்தனே என்னை
கடைக்கண்ணால்பாராயோ நீயும் [கா]
2. வள்ளிதெய்வானை மகிழும்லோலா
மறந்திடயென்னை ஞாயமோ சொல்
வந்தேனிதோ உன்பாதம்தேடியே
ஓடிவந்துகாக்ஷிதருவாய் [கா]

18. சலினீனேட் லஸகிந்துனே யெ. மெ.

பல்லவி

கந்தா உன்னை தேடினேன்
செந்திநகர்தன்னில்வாழும் [க]

சரணம்

1. காமக்குரோதம்தன்னையே
கண்டித்தறுத்திடவே
கருணைகடலைதந்து நீயும்
காப்பாற்றிக்கரையேற்றுவாய் [க]
2. வேதவேதாந்தத்திற்கும்
மெய்ப்பொருளானமூர்த்தி
விளங்கும் மயிலுடனே வேலா
காக்ஷிதரவேணும் இப்போ [க]

3. வள்ளியும் தெய்வானையும்
மகிழும் மணவாளனே
மகிழ்ந்து நான்காணவென்று உன்னை
வந்தேன் கிருபாகரனே வரம்
தந்து அருளுவாயோ சிலா [க]

19. ராகம் காம்போதி தாளம் ஆதி.

1. கந்தனைக்காணுமல் இருப்பேனோநான்
கந்தனே விந்தனே விமலனே [க]
2. ஆறுமுகவேலா உந்தனடைக்கலம்
அன்பனே வள்ளிமணவாளனே
3. அய்யாவேல்முருகா அடைக்கலமென்று வந்தேன்
பார்வதிபாலனே பார்புகழும் சீலனே [க]
4. சூராதிசூரனே சூரஸம்ஹாரனே
ஸ்வயம்பிரகாசனே உன்னடைக்கலம்

20. ராகம் ஆனந்தபைரவி தாளம் ஆதி.

பல்லவி

இன்னும் தயவுயில்லையா கந்தா எனக்கு
உற்றதுணையார் சொல்லய்யா [இ]

அனுபல்லவி

சின்னவயதுமுதல் உன்னைநம்பினதுண்டு
கந்தா கடம்பா திருச்செந்தூரில் வஸிக்கும் நாதா [இ]

சரணம்

மெத்தத்தயவுடனேகந்தாநீயும்
பக்தர்களை ரெக்ஷிப்பாய்
சின்னம்சிறியர்மீதில் இத்தனைவாதுனக்கு
கந்தனே யெந்தனுடசிந்தைகுளிர நீயும் [இ]

21. கமலாம்பனு யெ. மெ.

பல்லவி

ஸ்ரீ காந்தனே தேவிஸமேதா [ஸ்ரீ]

அனுபல்லவி

சித்தம்யெந்தன்மீதில் இல்லையோசொல்லய்யா [ஸ்ரீ]

சரணம்

ஏழும்மயிலுடன் வந்து இங்குகாக்ஷி
தருவதர்க்கு இதுசமயம்

எப்பொழுதும் உன்னை ஸ்துதிக்கின்ற யென்னை
தயவுடன் வந்து ரெக்ஷிக்கவேணும் [ஸ்ரீ]

22. ராகம் காம்போதி தாளம் ஆதி.

பல்லவி

கண்ணே கண்மணியே யென்
கண்ணே சுப்பிரமணியே

அனுபல்லவி

கண்டுமனங்கொண்டாடி
ஆனந்தமிகக்கொண்டேன்

சரணம்

1. வேலாயெனக்கூவினேன்
வந்திடவேணுமிப்போ
சக்திவடிவேல்கையும்
சரவணையிலுதித்தவனே [க]

2. வாவென்றுனையழைத்தேன்
வருத்தங்கள்கொள்ள.வேண்டாம்
வந்தவரம் தந்திடவே
இது சமயம் இது சமயம் [க]

3. காணவே வேண்டுமென்று
கருத்தினில்நானினைந்தேன்
கண்டுமனம் கொண்டாடி
உண்டாப்போல் பசிதீர்ந்தேன் [க]

23. கிளையிடாமல் யெ. மெ.

பல்லவி

கந்தாவுன்னைக்காணவென்று
கருத்தில்மிக ஆவல்கொண்டேன்

சரணம்

1. பரமனுடைய புத்திரனே பாரில்
எவர்க்கும் கிருபைசெய்வோனே
பக்தர்களிப்போ காணவென்று
தேடியே உன்னை வாடுகிறாள் [க]

2 இந்தவேளை வந்துயெனக்கு
கருணைக்கடலே ஊட்டுவாயோ
பாமனையுன்னை தினமும் நினைந்தேன்
பக்தர்க்காகவருவாய் நீயும் [க]

24, ராகம் சங்கராபரணம் தாளம் சாப்பு.

பல்லவி

கந்தனைக்காணமல் என்மனதிற்குள்
தவிப்பதையென்னசொல்வேன் [க]

அனுபல்லவி

பூமணகியசீலன் தேவியுடையபாலன்
முக்கண்ணருடைய புத்திரன் முக்திகொடுப்பவர் [க]

சரணம்

கோலமயிலேறியே சேவல்முடிசூடியே
குமரனும் கடவுளை திறமானதெய்வத்தை
தேகமானதொரு பங்கமானமூட்டை
ஜென்மங்கடைத்தேற எண்ணியிருவேலனை [க]

25. ப'ல்லவி

இரங்காதா உன்மனம்
பக்தவத்ஸலா பரமதயாளா [யி]

சரணம்

மனதிற்குள் வசிப்பாயே கந்தா
யெனக்கொருவருமில்லை நீதான்
தினமும் என் மனப் தன்னில் வசிக்க
தீரமாயெனக்கூட்டுவாய்
ஊட்டுவாய்நீயும் தேற்றுவாயென்னை
ஆற்றுவாயிப்போற்றுவாய் [யி]

26. பல்லவி

கண்ணே எந்தன்மணியே
எந்தன் கருத்தில் நினைந்தேன் [க]

சரணம்

உந்தனைக்காண நான்
ஓடியே வந்தேனே
ஒருவார்த்தைசொல்லாமலே
இருந்தாலெனக்கார்

சொல்லுவா வேலா
வடிவேலவா [ௐ]

27. வரமுலு மெ. மெ.

பல்லவி

கந்தனே நானுனை தினம் நினைந்தேன்
கருணையை நீ தா தா த [க]

அனுபல்லவி

பரமதயாபரி பூரண
வருவருவதற்கு கோரினேன்

சரணம்

அம்பிகையுடைய பாலா
அஸுரநாச அமரபோஷ
துஷ்டரான அஸுரர்கள்
வதத்திற்காக அவதரித்த
உந்தனைநான்காணவென்று
ஒருநொடியிலோடிவந்தேன்
ஒன்றும்பேசாதிருப்பதேனோ
உந்தன்மனம் கல்லோசொல்லாய் [க]

ராகம் பைரவி தாளம் சாப்பு.

28 சிந்தயாமா மெ. மெ.

பல்லவி

செந்திநகர்தன்னில்வாழும் கந்தா
உன்பாதம் கெதியெனக்கு [செ]

அனுபல்லவி,

எப்பொழுது உந்தனைநான் காணுவேன்
வந்துயெந்தன் குறைகளை நீதீர்ப்பாய் [செ]

சரணம்,

ஏழைமீதிலிவ்வாதுனக்குத்தகுமா
கடக்கண்ணால் பாராயே என்னை
கையிலில்வேலாயுதமும்கொண்டு நீ
எந்தன்முன்னில்வருகவேணுமிப்போ
இந்தவேளையிலென்னை
காத்தருள்செய்யவேணும்

நீயல்லாமல்வேறொரு
துணையாருண்டதைச்சொல்வாய் [செ]

29. பல்லவி,

வந்தனம் செய்தேன் கந்தா
வந்தனம் செய்தேன் [வ]

அனுபல்லவி,

சிந்தைமகிழயிந்தவேளே
வந்தருள்செய்வாய் [வ]

1. அடைக்கலமென்றேன் சரவணாயிப்போ
அறிவுதன்னைதிறந்து இப்போ ஒளியைகாட்டுவாய் [வ]
2. மனமுருகியே கந்தா வருந்தினேனுன்னை
மறந்திடாமலிந்தவேளே வந்தருள்செய்வாய்

30. ராகம் உசானி சாப்பு

பல்லவி

பார்க்கப்பதினாயிரம்கண்வேணுமே
வேலன் சேர்வையை [பா

அனுபல்லவி.

பார்க்கப்பதினாயிரம் கண்வேணும்
கடல்க்கரைதன்னில் வசிக்கும் தயாளனே
ஆர்க்கும்மனதில் அதிசுகம்தோணும்
ஆனந்தங்கொண்டுமே அங்கங்கள் பூரிக்கும் [பா

சரணம்

வள்ளிதெய்வானை மகிழும்லோலனே
மாசற்றரூபஸ்வயம்பிரகாசனே
மங்களமாகவே வந்துயெனக்கிப்போ
காக்ஷிதந்துமே கலிகளைத்தீர்ப்பாயே [பா]

31. வனஜாக்ஷி யெ. மெ.

பல்லவி

கந்தாவுன்னைக்காணவென்று நான்
செந்திநகர்தன்னில்வாழும் [க]

அனுபல்லவி

வந்தேனேயிப்போது உந்தனைதேடியே
வுந்து அபீஷ்டவரம் தருவாய் நீயும்

சரணம்.

1. அம்போதிதன்னுடைய கரைதன்னில் வஸிக்கின்ற
குமரனைகுருவே உந்தனடைக்கலம் [க]
2. சூராதி சூரனை ஸம்ஹாரம் செய்தவேலா
உந்தன்காக்ஷிநான் எப்போதுகாணுவேன் [க]
3. வள்ளிதெய்வானையும்மனமகிழும் லோலா
பக்தவத்ஸலா உன்பாதத்தைநம்பினேன் [க]

32. பராகுஜே யெ. மெ.

பல்லவி

ஆறுமுகா வடிவேலா
தீனரெக்ஷக கிருபாகரா [ஆ]

அனுபல்லவி

ஆறுமுகமும் பன்னிருகையும்
அழகுள்ளமார்பனே [ஆ]

சரணம்

1. நீகெதியன்றி வேறேயொருவர்
யாராகிலும் எனக்குவேர் துணையுண்டோ
வேதஸ்வரூபா வேதஸ்வரூபா
விமலனே வேலா சிவரூபா [ஆ]
2. கந்தா எந்தனுடவேலா கிருபைதர
ஓடிவாயிப்போ உள்ளம்மகிழ
கோலமயில்மீதினில்
கிருபைதர ஓடிவா [ஆ]

33. ராகம் நாதநாமக்கிரியை ஏகதாளம்

1. கந்தனே விந்தனே கருணாபிரஸாதனே
காருண்ணியமூர்த்தியை காணநான் ஆவல்கொண்டேன்
2. எந்தெந்தவேளையும் உந்தன் நினைவன்றி
உற்றார் உறவினர் மற்றொருவருமில்லை [க]
3. செந்தூர்தனில் வஸிக்கும்திவ்வியபிரதாபனே
தினம் தினம் உந்தனை தெரிசிக்கஆவல்கொண்டேன்
4. காமக்குரோதம்தன்னை கண்டித்தறுத்திப்போ
கைவல்லியமுக்தியை ரஸமாகஊட்டுவாய் [க]
5. வேலும்கையுடனே வந்திப்போதெரிசனம்
ஏழையென்றெண்ணியே வந்திடவேணும் நீயே [க]

34. ...கம் நாதநாமக்கிரியை ஏகதாளம்.

பல்லவி

கந்தாவுன்னைக்காணவென்று
தேடியே வந்தேனிப்போது

அனுபல்லவி

செந்திநகர்தன்னில்வாழும்
கந்தாவந்து ரெக்ஷிப்பாயே [க

1. மாமயில் மீதிலேறியே
வந்து காக்ஷிதருவாயே
உன்முககமலங்கண்டு
ஆனந்தம் கொள்ளுவேனிப்போ [க]

2. வள்ளிதெய்வானை மகிழும்
லோலாகுணசீலா உந்தன்
பாதத்தைநப்பினயென்னை
கைவிடாமர்காக்கவேணும் [க]

3. இப்போது நீயல்லாமலே
வேறொருதுணை புங்காணேன்
உண்மையிதை அறிந்து உன்
தெரிசனம்தரவேணும் [க]

35. சங்கராபரணம் ஆதி

பல்லவி

என்றுன்னை நான்
...பி அழைத்தேன் [வே]

அனுபல்லவி

...கைபாலனே ஆனந்தமூர்த்தியை
...ன் காணவே வேண்டுமே [வே

...சரணம்

...காருண்ணிய மூர்த்தியை
... கரையேறவழிசொல்லாய் [வே]

...கிடவா.யெ. மெ.

...ல்வி

...ந்ததைதளிர நீயும் [க]

அனுபல்லவி

கந்தனே எந்தனுடசிந்தைக்குளிர

சரணம்

1 வேலாயிதோ ஒடிவா

வேலா விமலா உன்பாதம் கெதிதானே [

2. தள்ளாத ஆழிக்கடலில் நீதள்ளிவிட்டால்

தாங்கேனோநானுமிப்போ

தாங்கமுடியாமல் தவிப்பதறியாயோ [கந்]

நிரோஷா ரெ. மே.

பல்லவி

செந்திநகரில்வாழும்

வேலவனே மங்களம் [செ]

அனுபல்லவி

பார்வதிபாலா உந்தன்

பாதம்நான்போற்றிசெய்தே [செ]

சரணம்

1. சூராதிசூரர்களை

ஸம்ஹாரம்செய்த வேலா [செ

2. உநதன்பாதார விந்தம்

கண்டுமனமகிழ்வேன் [செ

3. வள்ளிதெய்வானையுடன்

தெரிசனம்தருவாய்நீயும்

பக்திகொடுக்கும் தெண்டனும்வா

பரமகுருவானமௌனகுருவாழி

முக்திபெருகயாவர்களுநப்வாழி

இந்தக்கவிதை தினம்தி

எப்பொழுதும் நீடூழி

ஆறிருதடந்தோள்வாழ்க வ

கூறுடைதனிவேல்வாழ்க

ஏறியமஞ்ஞைவாழ்க ய

மாறிலாவள்ளிவாழ்க வா

சுபம

முற்